உ
சிவமயம்.

# "துறவி"

1956

| துன்முகி மலர் 2 | திங்கள் வெளியீடு. | ஆனி இதழ் 6 |
|---|---|---|




## தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,
திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"


பதிப்பாளர் :
சுவாமி சொரூபானந்தா

ஆண்டுக் கட்டணம் ரூ 2/- தனி இதழ் அணா 3/-

ஓம்.

# "துறவி"

## பொருளடக்கம்.







ஓம்.

# "துறவி"

| துன்முகி மலர் 2 | தமிழ் திங்கள் வெளியீடு. | ஆனி இதழ் 6 |
| --- | --- | --- |

## கடவுள் வாழ்த்து.

குறைவிலா நிறைவே கோதிலா வமுதே
யீறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெரு நீர்போற் சிந்தைவாய்ப் பாயுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
யிறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்
இனியுன்னை யென்னிரக் கேனே.

## கடவுள் வழிபாடு.

மக்களாய்ப் பிறந்த ஒவ்வொரு வரும் கடவுளை வழிபட வேண்டும் என்பது ஆன்றோர் கண்ட உண்மை. பல திறப்பட்ட மதங்களைப் போற்றும் மக்களும் நம் திருவள்ளுவனார் மொழிந்த திருக்குறளைப் பொன்னே போல் போற்றுகின்றனர் அவ்வாறாயின், கடவுள் வழிபாட்டை மாத்திரம் சிலர் கைவிடுவதேன்! வள்ளுவர் கடவுள் நம்பிக்கை யுடையவர் அல்ல என்று. அவர் கருத்தறியாதார் சிலர் கூறலாம் அவ்வாறு. வள்ளுவப் பெருந்தகையார் கூறிய ஓர் குறளை இங்கு ஞாபகமூட்ட விரும்புகிறேன்

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" —என்ற

குறளிலே தெய்வம் தொழாள் என்றமையால் தெய்வம் ஒன்று உண்டெனபதும் தெய்வ வழிபாடு அவசியம் என்பதும் அவை, மக்களாகிய ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதன என்பதும் விளங்குகிறது. எனவே நாம் கெட்ட எண்ணங்களை அறவே விடுத்து அன்போடு கடவுளை வழிபடுவோமாக.

# சுந்தரர் செந்தமிழ்.

தவத்திரு. ஐயாறு அடிகள்
( சித்தபாலைய தேசிகர் ஆதீனப் புலவர், பழநி. )

திருக்கயிலாயத்திலே ஆலால சுந்தரர் என்ற பெயர் பூண்டு சிவபெருமானுக்கு மலர் மாலையும் திருநீறும் கொண்டு செல்லும் அணுக்கத் தொண்டர். அணுக்கத் தொண்டர் என்பதற்குப் பக்கத்திலிருந்து தொண்டு செய்பவர் என்று பொருள். ஒரு நாள் நமது ஆலால சுந்தரர் திருநந்தனவனத்திற்கு மலர் பறிப்பான் சென்றார். அப்போது உமையம்மையாருக்கு அணுக்கத் தொண்டு புரியும் அனிந்திதையர், கமலினியர், என்ற இரண்டு பெண்கள் பூவெடுக்க அவ்விடம் வந்தனர். உலகம் உய்யத் தி திலாத்திருத் தொண்டத் தொகை தர சிவபெருமான் திருவருளால் நமது ஆலால சுந்தரர் அம்மாதர்களை விரும்பி நோக்க அம்மாதர்களும் இவரை விரும்பி நோக்கினர். இவ்வாறு காதல் கொண்ட நமது சுந்தரரும் அம்மாதராரும், தத்தம் மனதை ஒருவாறு திருத்திக்கொண்டவராய் மலரெடுத்துக் கொண்டு முறையே சிவபெருமான் திருமுன்னரும் தேவியார் திருமுன்னரும் சென்று சேர்ந்தனர். சிவபெருமான் ஆலால சுந்தரரை நோக்கி நீ மாதரை விரும்பினை ஆகலால் நிலவுலகிலே தென் திசைக் கண்ணே தோன்றி அன்னவருடன் இன்பந்துய்ப்பாய் என ஆணையிட ஆலால சுந்தரர் மனங்கலங்கினர். இறைவனை வணங்கி எம்பெருமானே தேவரீரது தாமரை மலரன்ன திருவடிகளை விட்டுப் பிரியும் சிறியவன் ஆயினேன். இத்தகைச் சிறியேனை மனிதப்பிறவி எடுத்து மயங்கும் காலத்தே தடுத்தாட்கொண்டருள வேண்டுமென வேண்டி நின்றனர். சிவ பெருமானும் அங்ஙனம் வரமருளினர்.

நமது ஆலால சுந்தரர் செந்தமிழ் நாட்டிலே "மாதொரு பாகனார்க்கு வழி வழி அடிமை செய்யும்" ஆதிசைவர் திருமரபிலே சடையனார் என்பவர்க்கும் அவர் மனைவியார் இசை ஞானியார்க்கும் அருந்தவமகவாய்த் தோன்றினர். இவரது பிள்ளைத் திருநாமம் "நம்பியாரூரர்" என்பது. இவர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து தெருவிலே விளையாடிக் கொண்டிருந்த போது அந்நாட்டரசராகிய நரசிங்க முனையரையர் இவரைக் கண்டார் இவரது திருமேனி அழகில் ஈடுபட்டார். தாமே இவரை வளர்க்க விரும்பினர், சடையனார் அனுமதிப்படி இவரைத் தமது அரண்மனைக்கு அழைத்துச் சென்று "தங்கள் அரசிளங் குமரற்கேற்ப அன்பினால் மகன்மையாகக் கொண்டார். நமது சுந்தரரும், பெருமைசால் அரசற்காதல் பிள்ளையாய் வளர்ந்தார். முன்னூல் சாத்தப் பெற்றார். அளவற்ற கலைகளை முறைப்படி கற்றார். திருமணப்பருவம் அடைந்தார். இந்த நிலையிலே சடையனார் தன் மகனார்க்குத் திருமணம்

செய்ய விரும்பினர். புத்தூர்ச் சடங்கவி திருமகளை மணம்பேசி மணநாள் குறித்தார். திருமணத் திருமுகமும் ஆங்காங்கனுப்பப் பெற்றது. நமது நம்பியாரூரர் "மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க" சிவபெருமான் திருவடித்தாமரைகளை உளத்தே கொண்டார், திருநீறு அணிந்தார், குதிரைமேல் ஏறினர், புதூரை அடைந்தார், சடங்கவி சிவாச்சாரியார் திருமணப்பந்தலை அடைந்தார், திருமணப்பந்தலில் வீற்றிருந்தார். அவ்வமயம் திருக்கைலையிலே ஆலாலசுந்தரருக்கு அளித்த வரத்தின்படி தடுத்தாட்கொள்வான் முதிய அந்தணர் வடிவுடன் திருமணப்பந்தரிடை வந்தார் நம்பியாரூரரைப் பார்த்து நம்மிருவர்க்குள்ளும் ஒருவழக்குண்டு அதனை முடித்த பின்னரே நீ மணஞ்செய்தல் வேண்டுமென்றருளினர். நம்பியாரூரரும் அங்ஙனமாகில் அவ்வழக்கினை முடித்த பிறகே மணஞ் செய்வேன் என்றார். உடனே எல்லா உலகையும் உடைமையாகவும், அடிமையாகவும் கொண்ட சிவபெருமான் இந்த நாவலாரூரன் என் அடிமை என்றார், உடனே முதியராக வந்த சிவபெருமான் அக் காலத்திலே உன் தந்தைக்குத் தந்தை எழுதித்தந்த ஆள் ஓலை. இருக்கின்றது நீ சிரித்த தென்னென்ன, நம்பியாரூரர், சிவபெருமானுக்கே அடிமைபூண்ட ஆதிசைவ மரபினர் வேறோர் அந்தணருக்கு அடிமை என்பதனை இன்று நீர் கூறக்கேட்டேன். நீ பித்தனோ என்றார். அதனைக் கேட்ட கிழ வேதியர் நான் பித்தனுயினுமாக பேயனுகிலுமாக, எவ்வளவு வசைமொழியினும் நான் நாணமட்டேன். நீ என்னை அறியவில்லை, வித்தகம் பேசவேண்டாம் பணிசெய்ய வேண்டும் என்றார். நம்பியாரூரர் என் பாட்டனர் எழுதிக்கொடுத்த ஆளோலையைக் காட்டும் என்றார். அந்தணர், நீ அடிமை செய்யத்தான் கடமைப்பட்டவன், ஓலைகாண உரியனல்லன் என்றார். உடனே நம்பியாரூரர் வெகுண்டார். ஓலையைப்பிடுங்கினர் கிழித்தார் அவ்வோலையை. வேதியர் இது முறையோ முறையோ என்று ஓலமிட்டார். அருகில் நின்றவர்கள் வேதியரை நோக்கி நீர் எவ்வூர்என்ன. நான் இருப்பது திருவெண்ணெய்நல்லூர் ஓலையை இவன் வலியப்பிடுங்கிக் கிழித்தான் இதனாலேயே என் அடிமை இவன் என்பது உறுதியாய்விட்டது என்றார். நம்பியாரூரர் உமது ஊர் திருவெண்ணெய்நல்லூராயின் இவ் வழக்கை அவ்வூரிலேயே தீர்க்கலாமே என்ன, வேதியர் அவ்வூரகத்துள்ள பெரியோர் முன் மூலஓலையைக் காட்டி எனக்கு அடிமை நீ என்பதை நிலைநாட்டுவேன் என்றுரைத்து முன் செல்ல நம்பியாரூரரும் மறையோரும் பின் சென்றனர். கிழ அந்தணர் திருவெண்ணெய்நல்லூரில் உள்ள பேரவையோர் முன் சென்று வழக்கினைச் சொன்னர், ஐய மறையவர் அடிமையாதல் இவ்வுலகில் இல்லையே என்ன, கிழவேதியர் இவன் கிழித்தது இவன் தந்தைக்குத் தந்தை எழுதிக்கொடுத்த ஆளோலை. ஆதலால் இவ்வழக்குப் பொருத்தமானது என்றார். சபையோர் நம்பியாரூரை நோக்கி நீர் இவர் கொணர்ந்த ஓலையைக்கிழித்தீர் இதனாலேயே உமக்கு வெற்றியில்லையென விளங்குகின்றது, இவர்

வழக்கினைப் பொருந்தக்கூறினர். உமது வாதம் என்ன என்றனர். நம்பியாரூரர் அவையோரை நோக்கி நான் ஆதிசைவன் அதனை நீங்களும் அறிவீர்கள். என்னைத்தன் அடியானென்று இவர் சாதிப்பின் கருதொணுமாயையாகும். என் மனந்தெளியவில்லை என்றார். அவையோர் அப்பெரியோரை நோக்கி இவர் உமது அடிமை என்பதனை "ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற்றயலார் தங்கள் காட்சியில் மூன்றில் ஒன்றில் காட்டுக" என்றனர். அதனைக்கேட்ட மறையவர் இவன் கிழித்தஓலை படிஓலை இதோ மூலஓலை என்று காட்ட அவையோர் ஏவலின்படி

"அருமறை நாவலாதி சைவனூரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய்நல்லூர்ப் பித்தனுக் கியானுமென்பால்
வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கோலை
இருமையால் எழுதிநேர்ந்தேன் இதற்கிவை என்னெழுத்து"

என்று வாசகன் வாசித்தான்.

அந்த ஓலையிலே சாட்சியாகக் கையெழுத்திட்டவர்களும் எம்முடைய கையெழுத்தென்றே ஒப்புக்கொண்டனர். ஓலையின் கண்ணே உள்ள கையெழுத்தும் இவரது பாட்டனருடைய வேறு கையெழுத்துக்களும் ஒத்திருந்தன. இந்த நிலையில் அவ்வூர்ப் பேரவையோர் நம்பியாரூரரைப்பார்த்து நீர் இம்மறையவர்க்குத் தோல்வியுற்றீர். இனி உமது கடமையென்ன வென்றால் நீ இவர்க்கு அடிமை செய்தலே என்ன. சுந்தரரும் அதற்கிசைந்தனர். அவையோர் அப்பெரியவரைப் பார்த்து முனிவரே இந்த ஆளோலையால் உமதூர் இவ்வூர் என்றே தெரிந்தது உமது வீடும் பொருளும் யாது காட்டுவீராக என்றனர். முனிவர் அவையத்தாரைப்பார்த்து நீவிர் யாரும் என்னை அறிந்திலீர்போலும், அறியீரேல் என்னுடன் வாரும் காட்டுவேன் எனமுன் நடக்க, அவையோரும் ஆரூரரும் பின் சென்றனர். இறைவர் திருவருட்டுறை என்னும் திருக்கோவிலுட் சென்று மறைய, மறையவர் அனைவரும் திகைத்து நின்றனர். நம்பியாரூரர் ஈதென்ன வியப்பு என்னை அடிமைகொண்ட அந்தணர் திருக்கோயிலுட்புகுந்தனரே எனப்பின் தொடர்ந்து அழைக்க, சிவபெருமான், உமாதேவியுடன் இடபவாகனத்தின்மேல் தோன்றி காட்சியளித்து முன்னரே ஆரூரனே நீ நமக்குத்தொண்டன், நமது ஆணைப்படி நிலவுலகிலே பிறந்தனை, நீ வேண்டியபடி இவ்வுலக வாழ்வு உன்னைத் தொடராதபடி தடுத்தாட்கொண்டோம் எனத் திருவாய் மலர்ந்தார். நம்பியாரூரர் அதனைக்கேட்டார். தாய்ப் பசுவின் கனைப்பது கேட்ட இளங்கன்றெனக்கதறினர். உடல் புளகம் உற்றது. கைகள் தலைமேற் குவிந்தன துதித்தார்.

சிவபெருமான் ஆரூரரை நோக்கி நீவன்மை பேசியதால் வன்தொண்டன் என்னும் நாமம் பெற்றாய். அன்பிற்பெரு சிறப்பின்

மிக்க அருச்சனைப்பாட்டே. ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ்பாடுக வெனக் கட்டளையிட்டருளினர். நம்பியாரூரர், வேதியராகி வழக்கினல் வெல்லவந்த ஊதியம் அறியாத சிறியேற்கு உணர்வினைத் தந்து உய்யக் கொண்ட கோதிலா அமுதே குணப்பெருங் குன்றே யாதினையறிந்தென்சொல்லிப்பாடுவேன் என்று இயம்பினர்.

சிவபெருமான் அன்பரை அருளோடு நோக்கி நீ மூன்னர் என்னைப் பித்தனென்றே மொழிந்தனை என்பெயர் பித்தனென்றே பாடுக எனக்கட்டளையிட வன்றொண்டரும் வள்ளலைப் பாடலுற்றார்.

"கொத்தார் மலர்க் குழலாளொரு கூருய் அடியவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ் வியல்நாவலர் பெருமான்
பித்தாபிறை சூடி எனப் பெரிதாந் திருப்பதிகம்
இத்தாரணி முதலாம் உலகெல்லாம் உய எடுத்தார்".

கொத்துக் கொத்தாக மலர்ந்த மாலைகளையணிந்த குழலினையுடைய அருட்சத்தியாகிய உமாதேவியை இடப்பாகத்தே யுடைய சிவபெருமான் அடியவர்பால் மெய்த்தாயினும் இனியனுயினுன். உடம்பைப் பெற்று வளர்க்கும் தாய் ஊனினைப் பெருக்குவர். உள்ளொளியினைச் சுருக்குவர். உலகியல் நெறியில் உழலச்செய்வர். உழல்வது கண்டுள்ள முவப்பர். அம்மையும் அத்தனுமாய கடவுள், பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிவர். ஊனினை உருக்குவர். உள்ளொளி பெருக்குவர். உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்தூட்டுவர்.

"பானினைந் தூட்டும் தாயினும் சாலப்பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்துசிக்கெனப் பிடித்தேன்எங்கெழுந்தருளுவதினியே
—திருவாசகம்.

மெய்த் தாயினும் இனியானை நாவலர் பெருமானும் நம்பியாரூரர்.

"பித்தாபிறை சூடி பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட்டு-
அத்தாவுனக்காளாய் இனிஅல்லேன் எனலாமே" [றையுள்

என்று திருப்பதிகம் பாடலுற்றார். இது முதல் தொடங்குவது 'சுந்தரர் செந்தமிழ்' பன்னிரு திருமுறைகளுள் இது ஏழாந்திருமுறை

செந்தமிழ்-செவ்விய தமிழ்க்கவிகள். செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய செஞ்சொற்கவிகள். செம்மையே யாய

சிவபெருமானைப் பாடுங்கவிகள். செம்பொருளாம் சிவபெருமான் திரு ஆணையின்படி பாடிய கவிகள். உள்ளந்தூயராம் உத்தமர் வாய்க் கவிகளையே கேட்க விரும்புவர் போலும். இதனாலேயே சுந்தரரை அருச்சனை பாட்டே நம்மைச் சொற்றமிழ் பாடுகென்று கட்டளை பிறப்பித்தார். இத்திருப்பதிகத்திலே கடவுளை, அத்தா, ஆயா, அன்னே, அடிகேள், ஆதீ, அண்ணா, அழகா என்றெல்லாம் அழைத்தமைகாண்க.

செம்பொருளாம் சிவபெருமான் திருஆணைப்படி சிவபெருமானையே பாடிய அதனால் செந்தமிழாயது.
அகச்சான்றுகள்.

இறைவன் அடிமையோலை காட்டி ஆட்கொண்ட தன்மையை நமது நம்பியாரூரர் திருநள்ளாறு திருப்பதிகத்தின் ஆறாவது திருப்பாடலில்.

"கற்பகத்தினைக் கனகமால் வரையைக் காமகோபனைக் கண்ணுதலானைச், சொற்பதப்பொருள் இருளறுத்தருளும் தூயசோதியை வெண்ணெய்நல்லூரில், அற்புதப்பழ ஆவணங்காட்டி அடியனா என்னை ஆளது கொண்ட, நற்பதத்தை நள்ளாறனை அமுதை நாயி-னேன்மறந் தென்னினைக் கேனே." என்றார்

ஊன்றுகேட்டு ஊன்றுகோல் பெற்ற அதனை திருவொற்றியூர் திருப்பதிகம் 4-வது திருப்பாடலில்.

"மூன்றுகண்ணுடையாய் அடியேன் கண் கொள்வதேகணக்கு வழக்காகில், ஊன்றுகோலெனக் காவதொன்றருளாய் ஒற்றியூரெனும் ஊருறைவானே," எனவும். திருவெண்பாக்கம் திருப்பதிகம் பத்தாவது திருப்பாடலில்

"மான் திகழும் சங்கிலியைத்தந்து வருபயன்களெல்லாம், தோன்ற அருள் செய்தளித்தாய் என்றுரைக்க உலகமெலாம், ஈன்றவனே வெண்கோயில் இங்கிருந்தாயோ வென்ன, ஊன்றுவதோர் கோலருளி உளோம் போகீர் என்றானே." எனவும். முறையே மொழிந்தார்.

மூவேந்தராம் சேர, சோழ, பாண்டியர் முன்னர் திருப்பரங்குன்றில் பதிகம்பாடிய அதனை, திருப்பரங்குன்றம் திருப்பதிகம் 11-ம் பாடலில்.

முடியாலுல காண்ட மூவேந்தர் முன்னே மொழிந்தாறுமோர் நான்குமோ ரொன்றனையும், படியா இவை கற்றுவல்ல அடியார்,

என்ருர். மற்றும் இவர் திருப்பதிகத்தில் அகச்சான்றுகள் பல உள. அறுபத்துமூன்று நாயன்மார்களேப்பற்றிப் பாடிய பாடல்கள் பல உள சில காண்பாம். திருத்தொண்டத் தொகை. இத்திருப்பதிகமே திருத் தொண்டர் புராணத்துக்கு முதல் றூல்,

சண்டேசுரரையும், கண்ணப்பரையும் திருவீழிமிழலேத் திருப் பதிகத்தில் "எறிந்த சண்டி இடந்த கண்ணப்பன் ஏத்துபத்தர்கட் கேற்றம் நல்கினீா" என்ருர். திருஞான சம்பந்தரும், திருநாவுக்கர சரும், திருவீழிமிழலேயில் பொற்காசு பெற்ற அதனே "இருந்து நீர் தமிழோடிசை கேட்குமிச்சையால் காசுநித்தல் நல்கினீர்" என்ருர் திருஞானசம்பந்தரையும், திருநாவுக்கரசரையும் "நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலே" என்றும் "நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவினுக்கரையன்" என்றும் "நாவின்மிசை யரையன்ஞெடு தமிழ் ஞானசம்பந்தன்" என்றும் பாடியுள்ளார்.

நாதமும் நாதாந்த முடிவும் நவை தீர்ந்த போதமும் காணுக போதமாய் ஆதி நடு அந்தம் சடந்த நித்தியானந்த போதமாய் பந்தம் தணந்த பரஞ்சுடராய், குறியும் குணமும் கோலமும் அற்று எங்கும் செறியும் சிவபெருமானது குணங்களேப் பற்றிக் கூறியுள்ள அதனேச் சிற்றறிவிற் கெட்டியவாறு சிறிதாராய்வாம். கடவுள் தாயும் தந்தையும் ஆதலே.

"அன்னே உனக்காளாயினி அல்லேனெனலாமே" எனவும் திருக்கடவூர் மயானம், திருப்பதிகம், மூன்றும் பாடலில்,

"தாயும் தந்தை பல்லுயிர்க்கும் தாமேயாய தலேவனுர்" எனவும், கூறியுள்ளார்.

கடவுள் அரியர், எளியர், என்பதனே, திருவலிவலம் திருப்-பதிகம் 10-திருப்பாடலில்.

"சான்று காட்டுதற்கரியவன் எளியவன் தன்னேத்தன்னி லாமனத்தார்க்கு" என்ருர், திருக்காளத்தி பதிகம் 2-வது பாடலில் "கமையார் கருணேயினுய்" என்று இறைவனுய் அமைத்தார் இதனுற் கடவுள் அருளுடையர் என்பதாயிற்று. இத்திருப்பதிகத்திலே, கடவுளே, அறிவே, அண்டா, அமைவே, ஐயா, ஒளியே, என்றெல் லாம். அமைத்தார்.

அருள்புரிபவர் என்பதனே "நம்பினுர்க்கருள் செய்யும் அந்த-ணர் என்றும்" "அடியாரை ஊழ்வினே நலியவொட்டாரே" என்றும், "கலந்தார்க்கருள் செய்திடும் கற்பகமே" என்றும், குறித்தார்.

"பாட்டகத் திசையாகி நின்ருனே" "ஏழிசையாய் இசைப் பயனுய் இன்னமுதாய்" "ஏழிசை ஏழ்நரம்பின் ஓசையை" என்னும் தொடர்களால் கடவுள் இசைவடிவர் என்பதனே அறிவித்தார்.

"தேனங் கத்தமு தாகியுள்ளூறும் தேசனைத் தினைத்தற்கினியானை" "மனத்தினால் நினைந்த போதவர் நமக்கினியவாறே, "எனக்கினியவன் தமர்க் கினியவன் எழுமையும் மனக்கினியவன் என்னும் தொடர்களால் கடவுள் இனியர் எனக் காட்டினார்.

பிழை பொறுப்பவர் என்பதனை, "குற்றம் செயினும் குணமெனக் கருதும் கொள்கைகண்டு நின் குரைகழல் அடைந்தேன்,, என்ற அதனால் அறிவித்தார்,

பின்னையென் பிழையைப் பொறுப்பானைப் பிழையெல்லாம் தவிரப் பணிப்பானை" என்றும் இயம்பினார்.

பொன்னும் கொடுப்பான் முத்தியும் கொடுப்பான் கடவுள் என்பதனை 'பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப் போகமும் திருவும் புணர்ப்பானை" என்றபாடலால் அறிவித்தார்.

"மெய்யனை மெய்யில் நின்றுணர்வானை மெய்யிலாதவர் தங்களுக்கெல்லாம் பொய்யானை" என்ற அதனால் சிவபெருமான் மெய்யர்க்கு மெய்யன் பொய்யர்க்குப் பொய்யன் எனப்புகன்றார். "மெய்யனை மெய்யர்க்கு மெய்ப் பொருளான விமலனை" எனவுங் கூறினார்.

"பண்ணாரின்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே" என்ற தொடரால் கடவுளைத் தமிழென்றே தெரிவித்தார், கடவுள் வேறு தமிழ் வேறு அன்று, கடவுளே தமிழ், தமிழே கடவுள்.

திருக்குறளை எடுத்தாண்ட திறம் வருமாறு.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய் தீ ரொழுக்க—நெறி நின்றார் நீடு வாழ்வார்" கடவுள் வாழ்த்து, குறள்,

திருநெல்வாயில் திருவரத்துறை, திருப்பதிகம,

"பொறிவாயில் இவ்வைந்தினையும் அவியப்பொருதுன்னடியேபுகும் சூழல் சொல்லே" 2-ம் பாடல் 4-ம் அடி.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்—இறைவனடி சேராதார்" குறள் கடவுள் வாழ்த்து

"அற்றார் பிறவிக்கடல் நீந்தியேறி அடியேன் உய்யப் போவதோர் சூழல சொல்லே" ஷை பதிகம் 3-ம் பா 4-ம் அடி

"உறங்குவது போலும் சாக்காடுறங்கி—விழிப்பது போலும் பிறப்பு" குறள்

உறங்கி விழித்தாலொக்குமிப் பிறவி" ஷை பதிகம் 4-ம் பாடல்

(தொடரும்,)

# கண்ணுதல் கருணை வெள்ளம்.

( மன்றிறையடிகள் )

எண்ணிலான் டெய்தும் வேதாப் படைத்தவள் எழிலின் வெள்ளம்
நண்ணு நான் முகத்தால் கண்டான் அவளினும் நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினுறாண்டு பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்.
(பெரிய புரா—திருஞான 1104)

[ சென்ற மாத இதழில் மேலே கண்ட பாடலில் சிலகருத்துக்களை எடுத்து விளக்கி வயது சென்ற பிரமதேவருடையதும் இளையராகிய திருஞான சம்பந்தப் பிள்ளையாருடையதும் ஆய உள்ளப் பண்புகளையும் உயர்வு தாழ்வு களையும் விளக்கினும். அவை பிள்ளையாரிடம் அன்பு காரணமாக உபசாரமாகக் கூறியதுபோல கூறி மேலும்சில கேள்விகள் எழவும் கூடுமாதலின் அவைகளையும் சேக்கிழார் திருவாக்கிற்கியைய எடுத்து விளக்குவது இக்கட்டுரையாகும். ]

## கருணை வெள்ளம் ஆயிரமுகத்தாற் காணல்:

பிரமதேவர்க்கு நான்கு திருமுகங்களுள்ளன ஆதலினல் திலோத்தமையினுடைய எழிலின் வெள்ளத்தை நான்கு முகங்களாற் கண்டார் என்பது பொருந்தும் புகலி வேந்தர்க்கு ஆயிரம் திருமுகங் கள் உள்ளனவா? இல்லையே ஆதலின் பொருந்தாது. இது சேக்கிழார் சுவாமிகளால் பெருமைப்படுத்துவதன் பொருட்டுச் சிறப்பித்துக்கூறப் பெற்றதாம் எனின் அற்றன்று. திருஞான சம்பந்த பெருமானுக்கு நம்மைப்போன்று ஒரு திருமுகமும் இரு கண்களுமேயுள்ளன என்பது உண்மையே ஆயினும் அவை உலகிற் காணப் பெறுவனவாகிய தூலப் புறப் பொருள்களையே காணவல்லன வன்றிப் பஞ்சீகாணப்பட்டுத் தூல பூதம் என்று கூறப்படும் வளி வெளி முதலியவற்றைக் கூடக் காண வல்லன அல்ல. ஆதலின் இத்தகையவாயுள்ள ஆயிரங் கண் களைப் பெற்றிருப்பினும் பயனின்றுமாதலின் இவ்வூனக்கண்களைக் கொண்டே கண்ணுதல் கருணை வெள்ளத்தைக் காணுதல் ஏலாததாம் என்க. இதனைற்றன் "அவனருளே கண்ணுகக் காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணுதே" எனக் கூறியதூஉமாமென்க.

அவ்வாறுயின் ஆயிரந்திருமுகங்களாற் கண்டார் என்பது எவ்வாறும் எனின்? அருள்ஞானம் பெற்றூர்க்கு விழி அனந்தம் என்றூதுபவாதலின் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவருள் நோக்கம் கைவரப்பெற்றவரேயாமாதலின் அவர் அவ்வாறு அதனைக் காணவல்லவராறுரென்பதும், அவ்வாறே பறிந்தாரென்பதும் உணர்க, அருள்ஞானம் பெற்றூர் அனந்தம் விழியுடையார் என்பதனைக்

"கண்ணிரண்டே யாவர்க்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணும்விழி ஏழாகும் ஈவோர்க்கு—நண்ணும்
அனந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்கு
அனந்தம் விழியென் றறி", என்னும் நீதிவெண்பாவா லுணர்க.

## கருணை வெள்ளம் கண்டார்.

ஆயிரமுகத்தாற் கண்டார் என்பது இவ்வாற்றாற் பொருந்தும் ஆனால் கருணை வெள்ளத்தைக்கண்டார் இவர், எழிலின் வெள்ளத்தைக் கண்டார் அவர் என இருவரையும் வேறு பிரித்து ஒவ்வொன்றையே கண்டார் என்பது பொருந்தாது. பிரமதேவர் எழிலின் வெள்ளத்தைக் காணும்போது ஓரளவு கருணை வெள்ளமும் கண்டிருத்தல் கூடாதா எனவும், பிள்ளையார் கருணை வெள்ளம காணும்போது "எழிலின் வெள்ளமும் கண்டிருத்தல் கூடாதா எனவும் கூட்டி ஐயுறற்பாலராயினும் அதுவும் ஏலாததேயாம் என்க.

உள்ளம் ஒரு பொருளைத்தான் பற்றி அறியும், அதுவும் தொடர்ந்து பற்றாது விட்டு விட்டுத்தான் பற்றியறியும். அதுவும் அறிஞர்க்கன்றி ஏனையோர்க்குத் தீய நெறியிற் செல்லுவதாய் அதனையேயறியும். அஞ்ஞான்று உணர்வுடையார் அதனைத் திருப்பி மாற்றம் பெறச்செய்வர் என்பது நியமம். ஆயினும் பிரமதேவர் நினைவு சால்புற்று உயர்ந்த நிலையிற் செல்லுவதற்கான சூழ்நிலையிலும் இல்லை. அவர் அழகொன்றினையே எண்ணத்திற்கொண்டு அதற்காகப் படைக்கும்போது மனமும் அவ்வாறே செல்லுவதனால் மாறிச் செல்வதற்குரியவாய்ப்பின்றாகின்றது. அவர் மேலும் எத்தொழிலைச் செய்யும்போதும் திருவருள் நிலையொன்றனையே யுணர்ந்து அவ்வாறு செய்து வரும் வழக்கத்தை யுடையருமல்ல. ஆதலின் அவர்க்கு எவ்வாற்றானும் இயைவது இன்றாயிற்று.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் எப்பொழுதும் எல்லாவற்றை-யும் திருவருள் மயமாகவே நினைப்பவர். சிவநேசச் செட்டியாருடைய புதல்வியின் நிலையை அடியவர்கள் தெரிவித்தபோதும் கூட அவ்வா-றாகவே கருதித் திருவருள் நிலையை விளக்குவதற்கு இதுவும் ஒரு வாய்ப்பென்றே எண்ணினர். அவரைப்போல அழகொன்றனையே நினைக்காமல் திருவருள் விளக்கம் ஒன்றனையே கருதினமையால் மற்றவர் எவராலும் செய்தற்கரிய இச்செயலைச் செய்யும் ஆற்றலும் அவர்பால் நிகழ்ந்தது. அரிய இச்செயல் திருவருட்டன்மையால் நிகழ்வதாகவே மேலும் அவருள்ளம் அதன் வசத்திலேயே ஈடுபட்டுப் புறவிடயங்களிற்படா நிலைமையினையும் பெருவதாயிற்று. முடிவு வரையில் நிகழ்ந்த செய்திகள் இதனை நன்கு புலப்படுத்தும். இதனாற்றான் பிரமதேவர் பிறவற்றிலீடுபடாது எழிலின் வெள்ளத்தையே காணவும், பிள்ளையார் பிறவற்றிலீடுபடாது கருணை வெள்ளத்தி-லேயே ஈடுபடவும் நேர்ந்தது என்க.

சீதாப் பிராட்டியாருடைய எழில் வெள்ளத்தினைக் கண்டு பருகி அம்மயலின் மூழ்கிச் சிந்தையும் செயலும் அற்ற நிலையில் ஒருநாள் அரியணை மீது இராவணன் வீற்றிருக்க அதுபோது சூர்ப்பநகை தான் இராமபிரானது எழிலின் மூழ்கி அவ்வண்ணத்தளாய் அரசவைக்கு வந்து இராவணனிடத்தில் தான் கண்ட இராமபிரானது தோள், முகம், கண், மார்பு, முதலிய அங்கங்களின் அழகை வருணித்துச் சொல்லிக்கொண்டிருக்க, அவையனைத்தும் சீதாப் பிராட்டியினுடையதென்றே கருதிக்கொண்டிருந்தான். அவன் உள்ளம் அவ்வழியே சென்றது. ஆதலின் எவரெவருள்ளம் எவ்வெவ் வழியிலமுந்திச் செல்லுகின்றதோ அவ்வழியே அப்பொருளையே அறிந்து மற்றவற்றினை யறியுந்தன்மையினை ஒழிக்து நிற்கின்றது என்பதனை இதன் வழியாகவும் அறியலாம்.

இன்னும் புகை வண்டி நிலையத்திற்குச் சென்று வேற்றாரிலிருந்து வரும் ஒருவரை எதிர்நோக்கிக்கொண்டிருக்கையில் அருகில் வருபவர் பலரையும் அறியாது அவர் நினைவாகவே இருத்தலையும் பின் தன்னருகிலுள்ளார் தம்மையும் அறியாநிலையிலிருந்ததையுணர்வதும் போலவும் கொள்க.

மரத்தினை யுணர்ந்தார் மரத்தினாற் செய்யப்பட்ட யானையை யுணராமை போலப் பரத்தினையுணர்ந்தார் பார் முதற் பூதங்களை யுணரார் என்பதனை விளக்கும்,

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்

என்னும் திருமந்திரத்தாலும் தெளிவுற அறிக.

**கண்ணுதல்.**

மாரன் கணைக்கிலக்காயினரே மடந்தையர் பால் இச்சை வைத்து மயங்குவர். மாரன் கணையின் தொழிலை

நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணவு நீக்கும் அசோகு—வனத்திலுறு
முல்லை கிடைகாட்டும் மாதே முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம், —என்னும்

வெண்பா வாலறியாம்,

மன்மதனை வென்றவர் சிவபெருமான். சிவபெருமானது நெற்றிக்கண் தீயே மன்மதனைப் பொடித்தது. சிவபெருமான் வென்றமையால் அப்பெருமான் திருவருள் பெற்றவர்க்கே மன்மதனை வெல்லும் ஆற்றல் உண்டாகும். மடந்தையர்பால் ஆசைநீங்கப் பெறுவர். ஏனையோர்கட்கஃதியலாது. ஆதலால் அவனருள்பெற்ற திருஞான சம்பந்தப் பிள்ளையார் அவ்விடத்து மயலிற்றேயா நிலையை யெய்தினர் என்க.

அண்ணல் தன் "கருணை வெள்ளம் ஆயிரமுகத்தாற் கண்டார்" என்ப தாதியவாயவேறொரு சொல்லைப் பிரயோகித்துப் பாடலை முடிக்கலாமாயினும் மாரனை வென்ற நுதற்கண் பெருமானிடத்து அன்பு பூண்டமையால் வெல்லுங் குறிப்பு முதலிய கருத்துக்கள் தோன்றுதொழியும். ஆதலின் அத்தகு பொருட்சிறப்புக்கள் முற்றும் பொருந்துதற் பொருட்டே கண்ணுதல் என்னும் பதம் எடுத்தாளப்பட்டிருக்கிறதென்பதை ஊகித்துணர்க.

"காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்றன் முதலியவாகக் கண்ணுதல் என்ற சொல் பெய்திருக்கும் வேற்றிடங்களிலும் நாம் எவ்விதம் முயன்றும் அவனருள் துணைசெய்யா வழிப் பயனின்றும் என்னும் பொருள்தோன்றக் கூறப்பட்டிருத்தலின் ஈண்டு அவ்வாறு கோடலும் பொருந்துமெனக் கொள்க.

"கண்ணுதல் ஆலயம் நோக்கும் கண்களே கண்கள், கறைக்கண்டன் கோயில் புகும் கால்களே கால்கள்" எனக்காணுதற்றொழில் கூறப்படும் வேறிடங்களிலும் கண்ணுதல் என்ற பதமே பெய்து அமைத்திருப்பதுபோல இவ்விடத்தும் அவ்வாறு பெய்திருப்பதறிந்து மகிழ்தற்குரியதாகும்.

## புகலி வேந்தர்.

புகலி என்பது சீகாழிப்பதிக்குரிய நாமங்கள் பன்னிரண்டில் ஒன்றும். திருஞான சம்பந்தப் பெருமான் அப்பதியிற்றிருவவதாரம் செய்தமையின் புகலிவேந்தர் என்னும் பெயரால் போற்றப்படுகின்றார் அத்தலத்திலே பிரமதேவர் இறைவனைப் பூசித்துப் பேறு பெற்றனர். அதனால் அத்தலத்துக்கு பிரமபுரம் என்றொரு பெயரும் உண்டு. பிரமதேவர் தம்மால் படைக்கப்பட்ட எண்ணிலா அண்டங்கட்குப் பதியாவர். திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கு அத்தகு சிறப்பில்லை எனக்கொண்டு குறை நினைக்கக் கூடும். அவ்வாறு நினைத்தல் கூடாது. என்று அவரது உயர்வு தெளிவாகத் தோன்றும் வண்ணம் அப்பிரமதேவராற் பூசிக்கப்பெற்ற புகலிக்கிறைவர் என வேறு பெயர் கூறுது புகலி வேந்தர் என்று போற்றப் பெற்றிருப்பதும் காண்க.

## புண்ணியப் பதினாறுண்டு.

பிரமதேவர் எண்ணிலாண்டுகள் நிலையுதலுறும் உடம்பினைப் பெற்றவர் பிள்ளையாரோ பதினாறுட்டைப் பிராயத்தினர். ஆதலின் மற்றவர்கட்கேலாத நிலையில் அதிகவாழ்நாள் படைத்தவர் என்பதனால் பிரமதேவர்க்கு ஏற்றம் உண்டாகின்றது ஆயினும் "பேசாத நாள் எல்லாம் பிறவாநாளே" என்று பழித்துப் பேசப்படுவதால் பயனற்ற நிலையில் அவலமாய்க் கழியும் பல்லாயிர கோடி ஆண்டுகளும் கணக்கிட்டு எண்ணும்தகுதியற்றுப் பிறவா நாளாய் ஒழிகின்றது. என்பதும் பிள்ளையார் தம் வாழ்நாள் திருத்தல யாத்திரை இறைவழிபாடாதிய வாய சிவ புண்ணியச் செயல்களிலேயே கழிவதாம் ஆதலின் அப்பல் கோடி வருடங்களும் இதற்குச்சற்றும் இணையாகாதென்பதும் தோன்றவே புண்ணியப் பதினாறுண்டு எனக் கூறியதாம் என்க.

இன்னும் சிவசோதியிற் கலக்கும் பொழுதும் இவ்வுடல் விடாது சென்றமையின் அதற்கு ஆண்டு எல்லைகூற இயலாமையின் பதினாறுண்டென்று பெயரளவாற் கூறலாமன்றி அறுதி கூறுதல். ஒல்லாததாம். ஆதலின் பதினாறுண்டு பேர் பெறும் என்று கூறினார் எனவுங் கொள்ளக் கிடக்கின்றதென்பதும் அறிக.

## அவளினும் நல்லாள்.

மற்ற எல்லா வகைகளாலும் பிள்ளையார்க்குப் பிரமதேவரைப் பார்க்கிலும் ஏற்றம் கூறலாம், ஆனால் பிரமதேவர் அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்தையும் தோற்றுவிப்பவர். பிள்ளையார்க்கு அத்தகு பேராற்றல் இன்றாம் எனக் கூறின்,

பாலை நெய்தல்பாடியதும், பாம் பொழியப் பாடியதும் ஆண் பனைகளைப் பெண்பனைகளாக்கியதும் போலன்றி உயிரில்லாப் பொருள் கட்கும் உயிர் கொடுத்துப் புதிதாய்ப் படைத்தலும் செய்ய வல்லுநர். பிரமதேவரினும் சிறந்த முறையிற் படைப்புச் செய்யும் ஆற்றலுடைவர் என்பதை விளக்கவே பிரமதேவரால் மிகச்சிறந்த அழகுடைய வள் என்று படைக்கப்பட்ட திலோத்தமையினும் பார்க்கச் சிறந்த அழகுடைய பூம்பாவையைப் பிள்ளையார் படைத்தனர் என்னும் கருத்தை விளக்கி அவளினும் நல்லாள் என எடுத்துக் கூறியதாம் என்றுணர்க. இன்னும் இவ்வாறே மற்ற எல்லாப் பகுதிகளையும் நுணுகி ஆய்ந்து அவற்றிற் பொதிந்து கிடக்கும் சிறந்த கருத்துகளை யெல்லாம் கண்டு கொள்க.

## முடிபு

இதுகாறும் சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கினை எடுத்து அவர் பொதிந்து வைத்த பல சிறந்த பகுதிகளிலுள்ள உயர்ந்த கருத்துக்களை விளக்கித் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் பிரம

தேவரினும் பன்மடங்கு உயரிய நிலையுடையர் என்பது கூறப்பட்டது சாத்திர நூல் களைக்கற்று அறிவு நூல் வல்லவராய்த் திகழ்வார்க்கே இவ்வுண்மை தெரியவரும். மற்றையர் அதனை யறியாது சேக்கிழார் சுவாமிகள் பெருமைப்படுத்திக் கூறுவதாகவே முடிவுசெய்வர். அது பொருந்தாது. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் சிவபெருமானொடு ஒருங்கு வைத்தெண்ணுந் தகுதியினர். நான்முகன் திருமால் முதலிய தேவர் யாரினும் மேம்பாடுடையவர் என்பதை காஞ்சிப்புராணம் திருமேற்றளிப்படலத்தில் "திருமேற்றளி என்னும் ஒருதலம் உண்டு. அதில் முன்னாளில் திருமால் சிவசாரூபம் பெற விரும்பித் தவம்செய்தனர். சிவபெருமான் அவருக்குக் காட்சியளித்து நீவிரும்பிய நமது சாரூபப் பேற்றை வைவச்சுத மனுவந்தரத்தில், இருபத் தெட்டாம் கலியுகத்தில், சீகாழிப்பதியில் தோன்றும் நமது அடியவனாகிய திருஞானசம்பந்தன் அளிப்பான் அதுகாறும் நீ இங்கேயிருந்து தவம்புரிக, என்று அருளிச்செய்து மறைந்தனர். திருமால் அங்ஙனமே தவஞ்செய்திருந்து திருஞானசம்பந்தப் பெருமான் அங்கு எழுந்தருளிவந்து, தமது அருட்செம்பாடலால் சிவசாரூபம் தரப் பெற்றனர்." எனக்கூறப் பெற்றிருப்பது கொண்டுணர்க.

இக்கருத்தை யுணர்த்தும் காஞ்சிப்புராணப் பாடல்களில இரண்டுமட்டும் கீழே தரப்பெறுகிறது.

காழிமாநகர் கவுணியர் குலத்தொரு காளை
ஏழி சைத்தமிழ் ஞானசம் பந்தன்எம் அடியான்
யாழ நீ பெற எம்முரு இங்குவந் தளிப்பான்
ஆழி யோய் அதுகாறும் இவ்வரைப் பினில் அமர்ந்து

ஈட்ட ருந்தவம் இயற்றுகென் றருளிநீங் குதலும்
கோட்டம் இன்றிமால் அம்முறை வழிந்து பூங்கொன்றைத்
தோட்ட லங்கலாற் றெழுப்பெறு முத்தமிழ் விரகர்
பாட்ட, லங்கலால் பரஞ்சுடர் திருவுருப் பெற்றான்

## அறிப்பு.

"துறவி" என்னும் திங்களிதழில் வெளியிட கட்டுரை எழுதியனுப்பும் துறவிகள் நல்ல கடிதத்தில் தொடர்பு எழுத்தில்லாமல் எழுத்துக்களை நன்கு தெரிந்து கொள்ளும்படி தனித்தனியாக ஒவ்வொரு கடிதத்திலும் ஒரேபக்கத்தில் எழுதி ஒவ்வொறு தமிழ் மாதம் 15உக்குள் அனுப்பிவைக்கும்படி வேண்டுகின்றோம்.

# இறைவன் இயற்கைத் திருக்கோவில்கள்

தவத்திரு. சுவாமி அருணகிரிநாதர் அவர்கள்,
(நாராயண தேசிகர் நிலையம், சென்னை.)

பூவின் வணமும் மணமும் அழகும் பொலிவுங் குளிர்நலமும்
மாவின் இளமென் றளிரும் நிறமும் மகிழ்சந் தன மகிலும்
காவின் எழிலும் பொழிலும் இனிய காயுங் கனிவகையும்
யாவும் இறைவன் பெருமை விளங்கும் அழகார் கோவில்களே 1

தெங்கும் பனையுங் கமுகுங் கழையுஞ் செழுமென் கதலிகளும்
தொங்கும் இளநீர்க் குலையும் இலையும் சுனைநீர்த் தாமரையும்
பொங்கும் புனலுஞ் சங்கின் திறளும் புரளுங் கழனிகளும்
எங்கும் நிறையும் இறைவற் கணிசெய் எழிலார் கோவில்களே 2

காடும் மலையுங் சுடலும் திடலும் கலையும் பிணைமானும்
ஆடும் பரியும் அணிசே வல்களும் அரிமா வரிமாவும்
ஓடும் நதியும் உதிரும் மலரும் ஒழுகுந் தேனடையும்
நாடும் இறைவன் நடனம் புரியும் நலமார் கோவில்களே 3

பாடுங் குயிலும் ஆடும் மயிலும் பயிலும் நடையனமும்
பேடும் புறவும் பிடியும் இடிபோற் பிளிறும் களிறுகளும்
கூடும் பெடையுங் குலவும் குருகுங் கொஞ்சும் அஞ்சுகமும்
தோடுங் குழையுந் திகழும் இறைவன் தொன்மைக் கோயில்களே 4

வித்தும் முளையுந் தழையும் பயிரும் விளையும் நீள்கதிரும்
முத்தும் பவளம் பச்சை வயிரம் முதலாம் நவமணியும்
சத்துப் பொருளும் நவதானியமும் தாதுப் பொருள் முழுதும்
அத்தன் புகழை நிறுவிக் காட்டும் அணியார் கோவில்களே 5

கங்குல் பகலுங் ககனத் தடுவும் கருமா முகிலுருவும்
எங்கும் பொழியும் மழையும் அதிரும் இடியும் குமுறல்களும்
பொங்குங் கடலும் கனலும் மினலும் புயலும் எரிமலையும்
அங்கங் குலைத் தசைவும் இறைவன் ஆண்மைக் கோவில்களே 6

நாவும் உதடும் நகுபல் லணமும் நவிலுஞ் சொற் பொருளும்
மேவு மெழுத்தும் அசையுந்தளையுந் மிளிர்சீ ரடிதொடையும்
பாவும் நயமும் இயலும் இசையும் பண்ணும் முத்தமிழும்
தூவும் மலருந் துதியும் இறைவன் தோயுங் கோவில்களே 7

காலைப் பைம்பொன் கதிரைச் சிதறிக் கடல்வாய் எழுசுடரும்
மாலைப் பொழுதும் அமுதைச் சொறியும் வானூர் மதியொளியும்
சோலைப் பொழிலைச் சுற்றும் ஞிமிறும் துள்ளும் மாவினமும்
பாலைப் பொழியும் பசுவுங் கன்றும் பரமன் கோவில்களே 8

ஊறுஞ் சுவையும் மணமும் உருவும் ஒளியும் உள்ளுணர்வும்
ஆறும் பொறிகள் ஐந்தும் அமையும் அரிதாம் மானிடரும்
கூறும் இன்சொல் ஈகை முதலாங் குணமும் நன்னடையும்
நீறுஞ் சாந்தும் நிலவும் நுதலும் நிமலன் கோவில்களே 9

கற்பக் கிருகம் மாமண்டபமும் கடவுள் அறிகுறியும்
சிறபக் கலையும் பொற்போ வியமும் திசுழும் மதிளரணும்
பொற்கோ புரமும் கற்கால் வடிவும் புனிதத் திருக்குளமும்
கற்காலத்து மனிதன் கண்ட கடவுள் கோவில்களே. 10

# வேண்டுகோள்.

பேரன்புடையீர்!

நம் தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம் தோன்றி 11-ஆண்டுகள் ஆகின்றன. இதன் நோக்கம் சமயப்பிரசாரம், கல்வி, மருத்துவம் முதலிய பல திறத்தாலும் நாட்டுக்குப் பணி செய்ய வேண்டும் என்ற ஒன்றேயாம்: இதன் அடிப்படையில் "துறவி" என்ற திங்களிதழை ஆரம்பித்தோம் முதலில் 6-திங்கள் வரை நடபெற்றது. இடையே 11-திங்கள் நின்று மீண்டும் தொடங்கி ஒன்றரையாண்டுகளாக வெளிவருகின்றது. இதன் வளர்ச்சியில் அன்பர் பலர் ஊக்கம் காட்டியும் சிலர் நன்கொடையாகப் பொருளீந்தும் ஆதரித்து வருகின்றனர். இக்காலத்தும் எக்காலத்தும் பொருளின்றேல் ஒருசெயலும் நிகழமுடியாதென்பதை அன்பர்கள் அறிவர். எனவே இத் திங்களிதழ் 16-பக்கங்களில் வெளிவருகின்றது. இனி அடுத்துவரும் இதழ் அதிக பக்கங்களுடன் வெளிவருவதற்குச் சந்தாகாரர்களும், பொதுமக்களும் ஆவன செய்து ஆதரிக்க வேண்டுகிறேம். இதுவரை அனுப்பப்பெருத தங்கள் சந்தாவையும் அன்புடன் 30—6—56க்குள் துறவி செயல் நிலையத்திற்கு அனுப்பி வைக்க வேண்டுகிறேம்.

**சுவாமி சொரூபானந்தா,**

துறவி செயல் நிலையம்,

கீழ்ப்பாலூர் (அஞ்சல்) கலசபாக்கம் வழி (வடாற்காடு)

